


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
31st year
of Publication

10—7—1966

# கலையும் காலமும்

ஓர் ஓவியமோ, சிற்பமோ அதனை உருவாக்க எடுத்துக்கொள்ளப்படும் காலத்தால் சிறப்படைவதில்லை.

ஒரு சிறந்த ஓவியத்தையோ, சிற்பத்தையோ எளிதில் உருவாக்கிப்பேரும் புகழும் பெற்றுவிட முடியாது. அன்றாடம் கடினமாக உழைத்தால்தான், இத்துறையிலே வெற்றி கிட்டும்.

யாரும் சென்றறியாத பாதைகளில் செல்லவேண்டும் என்பதே ஒரு கலைஞனின் தீராத தாகமாகும். அவனது கலையின் மர்மமே இத்தாகத்தில்தான் அடங்கியிருக்கிறது.

உழைப்புடன் ஒன்றாத திறமையால் பயனில்லை. வெறுந்திறமை, வெற்றி தராது.

திறமையின் உயிர்நாடி, கடின உழைப்புத்தான். மன எழுச்சியை மட்டும் நம்பியிருப்பவன், சூனிய நிலையை அடைந்து விடுவான்; அந்தச் சூனியத்திலிருந்து அவன் மீளவே முடியாது.

எனக்கு எழுச்சி யூட்டும் வாழ்க்கையில்தான் நம்பிக்கை; எழுச்சிதரும் விநாடிகளில் அல்ல!

ஓடுகிற ஓட்டத்தில், ஏதோ ஒரு வேளையில், ஒரு தலையாய சிற்பம் பிறந்துவிடலாம். ஆனால், இத்தகைய முயற்சிகள் பெரும்பாலும் பூர்த்தியடையாத படைப்புக்களாகவே இருக்கும்; கலைஞனின் தனித்தன்மையோ, இலட்சியங்களோ உருப்பெறாத பிண்டங்களாகவே தோன்றும்.

அவசர மனநிலையில் பிறக்கும் சிற்பமொன்று அற்புத சிருஷ்டியாகலாம்; எனினும் இத்தகைய அற்புதங்கள் ஒன்றிரண்டாகவே இருக்கும்!

ஒரு யுகத்தின் வளர்ச்சியைப் பொறுத்தே அழகியல் மதிப்புக்கள் அமைந்திருக்கும். அவை ஒவ்வொரு புதிய தலைமுறையாலும் மீண்டும் மதிப்பிடப்படும், அவற்றிலுள்ள தனி அம்சங்களும் பின்பற்றப்படும்.

எடுத்துக்காட்டாக, சில வகையான ஜப்பானிய மேல் தளங்கள், நவீனக் கட்டடக்கலையில் பயன்படுத்தப்படுகின்றன.

அஸிரியா, பாபிலோன், எகிப்து நாட்டுக் கலைமரபுகளையும் நவீனக் கலையில் காண்கிறோம். எனினும், ஒவ்வொரு தேசியக் கலைக்கும் சொந்த மரபுகள் உண்டு. சோவியத் சிற்பிகளாகிய நாம், நமது மாபெரும் முன்னோர்களான ரூப்லேவ், கிரெக் ஆகியோரைத் துணிவுடனும், நிச்சயமாகவும் சார்ந்து நிற்கலாம்.

மரபை உடைக்க விரும்புகிறவர்களுக்கு ஒரு ஆபத்து உண்டு; அவர்கள் தமது கலையையே உடைத்துவிடக்கூடும்!

இந்தக் கதிதான் சூட்சுமக் கலைக்கும் நேர்ந்திருக்கிறது. ஆன்ம ஒளியின்றி, வடிவ கணித முறைகளைப் பின்பற்றும் சூட்சுமக் கலையின் அலங்கோலத்தைப் பாருங்கள்!

சூட்சுமக் கலைஞன், உருவத்திலே புதுமை செய்வதாகக் கூறுவது, வெறும் போலித்தனமேயாகும். அவன் மனிதனையும், கலையின் அடிப்படை விதிகளையும் ஒதுக்கிவைப்பதால், அவனது படைப்புக்கள் கண்ணராவியாகவே இருக்கும்.

கலையிலே உண்மையிலேயே புதுப்பாதை காண்பது உண்டு. ஆனால் அதற்கும் சூட்சுமக் கலைக்கும் சம்பந்தமில்லை.

ரேபினுடைய கலை, உண்மையிலே புதுமையானது. ஏனெனில், அவர் ஜார் ஆட்சியின் அடக்குமுறைகளை மிக அழுத்தமாக அம்பலப்படுத்தியிருந்தார். அளவற்ற பணியாற்றி அங்கமெலாம் நொந்த அதிருஷ்டம் கெட்டவர்களின் தலைவிதியை அற்புதமாகத் தீட்டியிருந்தார்.

ரூப்லேவ் என்னும் தலைசிறந்த ஓவியர், புதிய வடிவங்களைச் சமைத்தார். அவரது கோடுகள், மிக முக்கியமானவை; எனினும் அவர் எதார்த்தவாதக் கலைஞரே.

ரூப்லேவின் ஓவியங்கள் மத சம்பந்தமானவை என்பதற்காக அவரை போற்றவில்லை. அவரது மனிதத்தன்மைக்காகவே நாம் அவரைப் பாராட்டுகிறோம். ஒரு துறவியின் கோலத்திலே, ஓர் உண்மை மனிதனின் ஆன்ம உலகைச் சித்திரிக்கிறார், அவர். ஆகவேதான் அவரைநாம் போற்றுகிறோம்.

நான் மூன்றாம் அலெக்ஸாந்தர் மன்னன் காலத்திலிருந்து இன்றுவரையுள்ள என் வாழ்வை — கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டு வாழ்வை—எண்ணிப் பார்க்கிறேன். என்னுடைய அநுபவத்திலிருந்தும், எனது எதிரிகளின் அநுபவத்திலிருந்தும் நான் உறுதியாக ஒன்றுகூற முடியும்; அதாவது, உண்மையான மனிதாபிமானக் கலையால்தான் மக்களுக்குப் பயனுண்டு; போலிப் புதுமைகளால் அவர்களுக்குப் பயனேதுமில்லை.

இன்றோ, நாளையோ ஒருவன் தனது வாழ்வின் பயனை எடைபோடத்தான் வேண்டும். நாமனைவரும் மக்களுக்கு ஒரு சிறிய செல்வத்தை விட்டுச் செல்

[12-ம் பக்கம் பார்க்க]

# THE SALEM MERCANTILE BANK LIMITED, SALEM. Balance Sheet as at 31st December, 1965.

| 1964. Rs. Ps. | CAPITAL AND LIABILITIES | Amount Rs. Ps. | Total Rs. Ps. |
|---|---|---|---|
| | 1. CAPITAL: | | |
| | Authorised Capital: | | |
| 80,000 00 | 3,200 Shares of Rs. 25/-each ... | | 80,000 00 |
| | Issued and Subscribed Capital: | | |
| 60,125 00 | 2,405 Shares of Rs. 25/-each fully paid ... | | 60,125 00 |
| 19,514 00 | 2. RESERVE FUND AND OTHER RESERVES: ... | | 19,771 56 |
| | 3. DEPOSITS AND OTHER ACCOUNTS: | | |
| | Fixed Deposits and call deposits .. | | |
| | Savings Bank Deposits .. | | |
| | Current Account, Contingency Account etc. .. | | |
| | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES AGENTS Etc. | | |
| | 5. BILLS PAYABLE: | | |
| | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE AS PER CONTRA: | | |
| | (i) Payable in India | | |
| | (ii) Payable outside India | | |
| | 7. OTHER LIABILITIES: | | |
| 61 00 | Unpaid dividends ... | | |
| 90 00 | Outstanding expenses ... | 90 00 | |
| | Interest accrued and payable .. | | |
| 222 00 | Charity Fund ... | 221 59 | |
| 6 00 | Suspence account ... | 27 50 | |
| 73 00 | Interest received in Advance ... | 64 89 | |
| 646 00 | Income-tax Reserve ... | 757 35 | |
| | | | 1,161 33 |
| | 8. ACCEPTANCES, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS AS PER CONTRA: | | |
| | 9. PROFIT AND LOSS: | | |
| | Balance as per last Balance Sheet ... | 1,919 33 | |
| | Less: Appropriations | | |
| | Dividend ... | | |
| | Reserve Fund ... | 250 00 | |
| | Bad debt Reserve ... | 650 00 | |
| | Income-tax Reserve ... | 600 00 | |
| | Remuneration to Hony. Treasurer and Manager ... | | |
| | | 419 33 | |
| 1,919 00 | Add: Profit for the year brought from the Profit and Loss Account ... | 2,910 54 | 3,329 87 |

| 1964. Rs. Ps. | PROPERTY AND ASSETS | Amount Rs. Ps. | Total Rs. Ps. |
|---|---|---|---|
| 5,647 00 | 1. CASH: (including Petty Cash) In hand and with Reserve Bank and State Bank of India | | 9,074 68 |
| | 2. BALANCES WITH OTHER BANKS: | | |
| | In India: Current Accounts | | |
| | Savings Deposits ... | | |
| | Outside India: ... | | |
| | 3. MONEY AT CALL & SHORT NOTICE: | | |
| | 4. INVESTMENTS AT COST: | | |
| 5,997 00 | (i) Securities of the Central and State Governments and other Trustee Securities including Treasury Bills of the Central and State Government - 12 Years National Savings Certificates Rs. 1000, 10 Years Treasury Savings Certificates and Madras State Loan Bonds Rs. 2,997-50 np | 3,999 50 | |
| | (ii) Shares ... | | |
| | (iii) Debentures or Bonds ... | | |
| | (iv) Other Investments | | |
| | (v) Gold | | 3,997 50 |
| | 5, ADVANCES: (Other than bad & doubtful debts for which provision has been made to the satisfaction of the auditors) | | |
| | (i) Loans, Cash Credits and overdrafts etc. | | |
| 59,830 00 | (i) In India ... | 58,288 65 | |
| | (ii) Outside India ... | | |
| | Less: Reserve for Bad debts ... | 1,218,82 | 57,069 83 |
| | (2) Bills Discounted and purchased: ... | | |
| | (i) In India ... | | |
| | (ii) Ooutside India ... | | |
| | PARTICULARS OF ADVANCES: | | |
| 52,760 00 | (i) Debts considered good in respect of wich the Banking Company is fully secured including Rs. 2,100 under suit decrees .. | 48,650 00 | |
| 7,639 00 | (ii) Debts considered good for which the Banking Company holds no other security than the debtors, personal security including those under suits and decrees ... | 9,638 65 | |
| | (iii) Debts considered good secured by the personal liabilities of one or more parties in addition to the personal security of the debtors. ... | | |
| | (iv) Debts considered doubtful or bad, not provided for ... | | |
| 3,840 00 | (v) Debts due by directors or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons ... | 3,550 00 | |
| | (vi) Debts due by Companies or firms in which the directors partners or managing Agents or in the case of private company as members ... | | |
| 340 00 | (vii) Maximum total amount of advances including temporary advances made at any time during the year to Directors or Managers or officers of the Banking Company or any of them severally or jointly with any other persons. | 50 00 | |
| | (viii) Maximum total amount of advances including temporary advances granted during the year to companies or firms in which the directors of the Banking Company are interested as Directors, partners, or Managing Agents or in the case of Private Companies as members ... | | |
| | (iv) Due from Banking Companies ... | | |
| 280 00 | 6. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION AS PER CONTRA: | | |
| | (i) Payable in India ... | | |
| | (ii) Payable outside India ... | | |
| | 7. CONSTITUENTS' LIABILITIES FOR ACCEPTANCES, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS PER CONTRA: | | |
| | 8. PREMISES LESS DEPRECIATION: | | |

## சேலம் மெர்கன்டைல் பாங்கு லிமிடெட்.

### நிர்வாக சபையாரின் ரிப்போர்ட்.

சேலம் மெர்கன்டைல் பாங்கு லிமிடெட்டின் மகாசபையார் அவர்களுக்கு நிர்வாக சபையார் கொடுக்கும் 1965-ஆம் வருஷ வருஷாந்திர ரிப்போர்ட்.

1. இந்த பாங்கு 1895-ம் வருஷம் ஜூலை மாதம் 1-ந் தேதியில் ஸ்தாபிக்கப்பட்டு சென்ற 1965-ஆம் டிசம்பர்-மீ 31-உ யோடு 71 வயது முடிவடைந்திருக்கிறது. 1966-ஆம் ஜனவரி-மீ 1-உ முதல் 72வது வயது நடந்துவருகிறது.

2. பாங்கியின் 71-வது வயதின் மொத்த லாபத்தில் சிலவுகள் போக ரு. 2910-54 நிகர லாபம் கிடைத்திருக்கிறது. சென்ற வயதின் லாபம் ரு. 419-33ஐ சேர்த்து நிகர லாபம் ரு. 3329-87 ஆகிறது. ஷை நிகரலாபத்தை அடியில் கண்டவாறு பிரிவினை செய்யலாமாய் பிரேரேபிக்கிரோம்.

| | |
|---|---|
| ரிசர்வ் பண்டுக்கு | 600-00 |
| வருமான வரி பண்டுக்கு | 1,200-00 |
| நஷ்ட ஈடு பண்டுக்கு | 850-00 |
| அடுத்த வருஷ லாபத்துடன் சேர்க்க | 679-87 |
| ஆக ரு. | 3,329-87 |

3. நமது பாங்கியில் வரவு சிலவு செய்துவரும் வாடிக்கைதாரர்களுக்கு எங்கள் நன்றியை தெரிவித்துக்கொள்கிரோம் பங்குதாரர்கள், உத்தியோகஸ்தர்கள் ஒத்துழைப்புக்கு வந்தனமும் தொடர்ந்து ஆதரவும் கோருகிரோம்.

உலக நாடுகளில்

# அணு ஆராய்ச்சி

அண்மையில் பசிபிக் மகா சமுத்திரத்தில் பிரான்ஸ் தொடர்ந்து அணுதண்டுகளை வெடித்து சோதனை செய்யும் என்றும், இச்சோதனை வரும் ஆறு அல்லது எட்டு ஆண்டுகள் வரை நடைபெறுமென்றும் தெரிய வருகிறது. இந்நாட்கள் வரை தரை மட்டத்திற்கு மேலே குறைந்த அளவு அணுகுண்டுகளை வெடித்திருக்கிறது என்றிருந்த போதிலும் வட ஆப்பிரிக்காவிலுள்ள அல்ஜீரியா நாட்டில் ஏறக்குறைய ஓர் 20 அணுதண்டுகளை இந்நாடு பூமிக்குள் வெடித்துப் பரிசோதனை செய்திருக்கிறது. அணுகுண்டு ஆராய்ச்சியில் முன்னேற்றங்கண்டுள்ள இந்நாடு அணுதண்டு ஆராய்ச்சியில் முன்னணியில் நிற்கும் நாடுகளின் வரிசையில் விரைவில் இடம் பெறும்என்பதில் ஐயமில்லை. முன்னணி இடம் பெறுவதற்கு பூமிக்கு மேல்காற்றுவெளியில் அணுகுண்டுகளை வெடித்துப் பரிசோதனை செய்து அப்பரிசோதனையில் வெற்றி காண்பது இன்றியமையாததாகும். இந்நாட்டின் இன்றைய முன்னேற்றத்தின் அளவை கணக்கிட்டு இன்னும் 6 ஆண்டுகளில் (அதாவது 1972-வது ஆண்டு காலத்தில்) பிரான்ஸ் ஹைட்ரோஜன் வெடிகுண்டுகளைத் தயாரித்து விடும் என்றும் அவைகளைக் கடல் மூழ்கிக் கப்பல்களில் பொருத்தப்பட்டுள்ள ஏவுகணைகளில் பொருத்தி பிரயோகிக்கவழி தேடும் என்றும் தெரிய வருகிறது. இத்திக்கில் வெற்றி பெற்றால் பெருத்த சக்தி ஓர் நாட்டின் உதவியை நாடாமல் அணுகுண்டு பலம் பெற்ற முதல் நாடாக பிரான்ஸ் உருவாகும்.

சீனா அணுதண்டு ஆராய்ச்சியில் ஈடுபட்ட காலத்தில் முதல் கட்டத்தில் ரஷ்யாவிடமிருந்து பெருத்த அளவு உதவிகளைப் பெற்றுக் கொண்டது. பிரிட்டன் பொருளாதாரத்தின் காரணங்களைக் கொண்டு 1958, 1960-இல் யூ. எஸ்ஸிடமிருந்து அணுவெடிகுண்டுக்கு வேண்டிய மூலப்பொருள்களை விலைக்கு வாங்கிக் கொண்டது. தன்னுடைய அணுகுண்டு சக்தி கீழ்த்தரமாக இல்லாமல் இருப்பதற்கு 1963லிருந்து, யூ எஸ்ஸிடமிருந்தே இத்திக்கில் பிரிட்டன் பெரும்பாலும் உதவிகளைப் பெற்று வருகிறது. நாடோ கூட்டணியில் பிரான்ஸ் கலந்து செயலாற்றும் என்று எண்ணி யூ எஸ். இந்நாட்டு ஆரம்ப காலத்தில் அணுகுண்டு ஆராய்ச்சித் துறையில் உதவி செய்து வந்தது. ஆனால் பிரான்ஸ் முழு அளவு நாடோவின் மேற்பார்வையின் கீழ் வருவதற்குமறுத்து விட்டபடியால் யூ. எஸ்ஸும் அணுகுண்டு ஆராய்ச்சித் துறையில் பிரான்ஸுக்கு உதவியை அளிக்க மறுத்து விட்டது. நடப்பு காலத்தில் பிரான்ஸ்பண்டைய முறைப்படி பாம்பர்களில் தான் அணுகுண்டுகளைப் பொருத்தி போர்களில் ஈடுபட முடியும். ஹைட்ரோஜன் வெடிகுண்டுகளைத் தயாரித்து அவைகளை ஏவுகணைகளில் பொருத்திபோரில் செயல்படுவதற்கு இந்நாட்டுக்கு இன்னும் சில காலம் வேண்டியது வரும். ஆயினும் ஹைட்ரோஜன் வெடிகுண்டு சக்தி பெற்ற நாடுகளின் முன்னணியில் இடம்பெற பிரான்ஸ் விரைவில் வழிதேடும். பசிபிக் மகா சமுத்திரத்தில் இப்பொழுது இந்நாடு வெடிக்கவிருக்கும் ஹைட்ரோஜன் குண்டு சுமார் இரண்டு ஆண்டுகளுக்குள் தயாராகி விடுமென்று ஊகிக்கப் படுகிறது.

இப்பொழுது சீனாவும் அணுதண்டு ஆராய்ச்சித் துறையில் முன்னேற்றங் கண்டுள்ள நாடாகத் திகழ்கிறது. சீனா அணுதண்டு ஆராய்ச்சியில் ஈடுபடுவதற்கு 4 ஆண்டுகளுக்கு முன்பே பிரான்ஸ் தன்னுடைய ஆராய்ச்சிகளைத் துவக்கியிருந்த போதிலும் இன்று சீனாவிற்சப் பின்னிடத்தைத் தான் பெற்றுக் கொண்டுள்ளது ஆச்சரியத்தை விளைவிக்கிறது. ஹைட்ரோஜன் வெடிகுண்டு உற்பத்தியிலும் சீனாவிற்கு முன்பு ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு வந்த பிரான்ஸ் சீனாவிற்கு பின்பு தான் இத்திக்கில் வெற்றி பெறும்என்று தோன்றுகிறது அணு ஆராய்ச்சியை பிரிட்டனுக்குப் பின்பு பிரான்ஸ் துவக்கிய போதிலும் முன்னேற்றப் பாதையில் பிரிட்டனைக் கடந்து வெகுதூரம் சென்றது. ஆனால் அதே பாதையில் சீனா பிரான்ஸைக் கடந்து சென்று விட்டது இன்று நாம் காணும் ஓர் நம்பத்தகாத உண்மை!

அணுகுண்டு செய்வதற்கு ப்ளூடோனியம் என்னும் உலோகமும், ஹைட்ரோஜன் வெடிகுண்டி செய்வதற்கு யுரானியம் — 235 உலோகமும் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. யுரானியம்-235 உலோகமும் ஓர் கொதிகலன் மூலமாக உருவாக்கப்பட்டு வந்தது. சீனா வெடித்த அணுகுண்டுதகடுகளை ஆராய்ச்சி செய்ததிலிருந்து யுரானியம்- 235 உலோகம் செய்யப்படும் கொதிகலனைத் தானும் கண்டு பிடித்துள்ளது என்பது தெரிய வருகிறது. ஹைட்ரோஜன் வெடிகுண்டு வெடிப்பதற்குஇன்றியமையாத விசையையும் சீனா இப்பொழுது ஆராய்ச்சிகள் மூலம் உருவாக்கியுள்ளது. சீனாவின் ஆராய்ச்சியின் வேகத்திலிருந்து இன்னும் ஓர் ஆண்டிலிருந்து ஒன்றரை ஆண்டுக்குள் ஹைட்ரோஜன் வெடிகுண்டை வெடிப்பதற்கு சீனா தயாராக இருக்கலாம். அணுதண்டு ஆராய்ச்சியில் இருந்து ஹைட்ரோஜின் குண்டு ஆராய்ச்சியில் இவ்வளவு விரைவில் சீனாவைப் போல் வேறு ஓர் முன்னணி நாடும் முன்னேறவில்லை என்பது ஆச்சர்யத்தை விளைவிக்கிறது.

இத்தகைய சக்தியைப் பெற்றிருந்த போதிலும் சீனா அணு ஆயுதம் படைத்த ஓர் நாடாக இன்னும் முதலிடம் பெறவில்லை. ரஷ்யாவின் உதவியைக் கொண்டு உருவாக்கிய ஓர் பழைய கடல் மூழ்கியைத்தான் இன்று சீனா பெற்றுள்ளது. இதில் பொருத்தப்பட்டுள்ள ஏவுகணைகள் சுமார் 400 மைல்கள் வரை தான் செல்லும் ஆக்கம் பெற்றுள்ளன. சீனாவிற்கு பாம்பர்கள் கிடையாது. ஆகையால் தான் இந்நாடுஏவுகணை ஆராய்ச்சிகளில் பெருத்த அளவு ஊக்கம் காட்டுகிறது. 1970 ஆவது ஆண்டுக்குள் சக்தி பெற்ற ஏவுகணைகள் பொருத்தப்பட்ட பலத்த நீர்மூழ்கிக் கப்பல் படை ஒன்றை சீனா உருவாக்கி விடும் என்று யூ.எஸ். நிர்ணயித்துள்ளது. அப்படியாயின் வருங்காலத்தில் யூ.எஸ்ஸையும் ரஷ்யாவையும் தவிர மூன்று நாடுகள் பெருத்த அணுசக்தி நாடுகளாக முன்னேறும். அவைகள் 1. பிரிட்டன், 2. பிரான்ஸ், 3. சீனாவாகும். பிரிட்டன் 1970லும், சீனாவும் பிரான்ஸும் 1972லும் இவ்வந்தஸ்தைப் பெறும் என்று திட்டவட்டமாகக் கூறலாம்.

# கடன் வாங்குவது எப்படி ?

— துறைசை இளவல்

'கடன் பட்டார் நெஞ்சம் போல் கலங்கினன் இலங்கை வேந்தன்' என்றார் கம்பர். கடனை வாங்கிவிட்டுப் பின்னர் எப்படிக் கொடுப்பது என்பதை அறியாமல் வழியில்லாது கலங்குபவனைத் தான் கம்பர் தன் காலத்தில் கண்டிருப்பார். கடனை வாங்கிவிட்டுக் கலங்குபவன் ஒரு புறமிருக்கட்டும், முதலில் கடனை வாங்குவது எப்படி என்பது ஒரு பிரச்னையாகி அதனால் கலங்குபவனைக்கம்பர் கண்டிருக்க மாட்டார். கண்டிருந்தாரானால் 'கடன் வாங்குவார் நெஞ்சம்போல் கலங்கினன் இலங்கை வேந்தன்' என்று எழுதியிருப்பார்.

உழவுத்தொழிலைப் பெருக்கி உணவு உற்பத்தியைக் கூட்டி உணவுப்பிரச்னையைத் தீர்க்க விவசாயிகளுக்குப் பல்வேறுவிதமான கடன்களை அரசாங்கம் அளிக்கிறது. கிணறு வெட்டக் கடன், மாடுவாங்கக் கடன், எந்திர விவசாயக் கருவிகள் வாங்கக் கடன் எரு வாங்கக் கடன், கிணற்றுக்கு கல்கட்டுக் கட்டக் கடன் முதலியவை சர்க்கார் அளிக்கும் கடன் வகைகளாகும். 'சர்க்கார் எவ்வளவு கடனைத்தருகிறது' என்று ஆச்சரியப்பட வேண்டாம். கேட்கக் கேட்க தேனமிர்தமாக இதயத்தை எடுத்து ஏர்கண்டிஷன் அறைக்குள் வைத்தாற்போலக் குளிர்ச்சியாக இருக்கும். பலவிதங்களில் அரசாங்கம் கடன் உதவி புரிவதைமறுக்கவோ மறைக்கவோ முடியாதுதான். ஆனால் அந்தக்கடனை வாங்க உழவர்கள் ஏழைப் பாட்டாளிகள் எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறார்கள் என்பதை (நேரடி அனுபவத்தின் மூலமே) அறிந்தால் அந்த எரிச்சலுக்கு வெப்பத்துக்கு சமீபத்தில் தமிழ்நாடெங்கும் வீசிய அனல்காற்று எவ்வளவு சுகமாக இருந்தது என்பதை உணரலாம். 'உழந்தும் உழவே தலை' என்னும் சிறப்பானதொழிலை மேற்கொண்டிருப்பவர்கள் 'உலகத்தார்க்கு ஆணி'யாகவும் 'பல குடை நீழலும் தங் குடைக்கீழ்க்காணும் உழவர் பெருமக்கள் மேற் கூறிய கடன்களை வாங்கஅழற்பட்ட புழுவெனத்துடிக்கும் துடிப்பை என்னவென்பது? உழுதுண்டு வாழ்பவர்களை மற்றவர்கள் தொழுதுண்டு செல்லும் நிலைமாறி இன்று மற்றவர்களை உழுதுண்டு வாழ்வோர் தொழுதுபின் செல்லும் இழிவை- இரங்கத்தக்க நிலையை -என்னவென்று எடுத்துரைப்பது?






உலகத்தார்க்கு உணவூட்டும் கடமையில் ஈடுபட்ட அப்பெருமைக்குரியஉழவன் கேவலம்ஜநூறோ ஆயிரமோ சும்மா அல்ல, கடனாக அதுவும் அரசாங்கத்திடமிருந்து வாங்க என்ன பாடுபட வேண்டியிருக்கிறது? இவ்வாறு துன்புறும் அவ்வுழவர் குழாம் இட்ட சாபத்தால் தானே என்னவோ நம்மவர்க்கு இன்று உணவுகிடைப்பதுபிரச்னைக்குரிய விஷயுமாகிவிட்டது.

சாதாரணமாக உழவன் ஒருவன் தன் நிலத்தில் கிணறு வெட்ட விரும்புகிறான் என்று வைத்துக் கொள்வோம். கிராமத்தின் முன்சீப்பையோ கணக்கப் பிள்ளையையோ அரசாங்கக் கடன் சம்பந்தப்பட்ட விஷயங்களைப் பற்றி விசாரிப்பான். இந்தக் கணக்கப் பிள்ளைகளும் முன்சீப்புகளும் கொடுங்கோல் மன்னனைக்காட்டிலும் கொஞ்சம் கருணை (?) மிகுந்தவர்கள். விவசாயிகளிடம்தம்முடைய தனிப்பட்ட விவகாரங்களையும் சம்பந்தப்படுத்தி, அதைப் பெரிதாக்கி, தேவைப்படும் சமயங்களில் அவர்களைப் பழிவாங்குவதை இந்த கிராமஅதிகாரிகள் ஒருபொழுதுபோக்காகக் கொண்டிருக்கிறார்கள். (இக்கூற்றுக்கு மாறுபட்டவர்களும் இருக்கலாம். பிரச்னை அவர்களைப் பற்றியதல்ல.) இவர்கள் கடன் விவகாரத்தைப் பற்றி நேரடியாகச் சொல்லமாட்டார்கள். படிக்காத அந்தப் பாமரனுக்கு பஞ்சாயத்து யூனியன்கமிஷனருக்கு மனு செய்ய வேண்டும் என்ற சாதாரண விஷயம் எங்கே தெரியப் போகிறது. பிதுபண்ணிக்கொண்டு பழைய விஷயங்களையெல்லாம் சம்பந்தப் படுத்தி ஒருவாறு மனு செய்வதைப் பற்றி அவனிடம் திருவாய் மலர்வார்கள். அவனுக்கு மனு எழுதத் தெரியுமா, என்ன? கிராமத்தின் தலைவர்களைத் தாஜா செய்து அவர்களை மனு எழுதச் சொல்லி வாங்க அவன்படும் பாடு சொல்லி முடியாது. ஒருவாறு மனு எழுதியாகி விட்டது என வைத்துக் கொள்வோம். அது பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்துக்குப் போகும். அலுவலகத்தில் அதையெல்லாம் உடனடியாக எடுத்துப்பார்க்க மாட்டார்கள். ஏரின் உழவன் அங்கேயும் போக வேண்டும். அங்கே இருக்கும் குமாஸ்தாவைப் பிடித்துத் (அவர்களுக்கு எழுத்தர் என்ற தூய தமிழ்ப் பெயர் வேறே. தூய்மை அற்றவர்களுக்கு) தலையைச் சொரிந்தாகவேண்டும். 'இதுமாதிரி மனு செய்திருக்கேங்கே கடன் வேணும்' அவர் அந்தசாதாரணக் குமாஸ்தா தான் எஸ். எஸ். எல். சி படித்து கஷ்டப்பட்டு குமாஸ்தா வேலை வாங்கிய போலிப் பெருமையை அந்த உழவனிடம் தானே காட்ட முடியும்? ஓ, அனுப்பிச்சிருக்கியா, அதுக்கென்ன? இப்பவே அவசரமா? கடன்னு சும்மான்னு நினைச்சியா' என்பார், என்னவோ அவர் வீட்டிலிருந்து எடுத்துக்கொண்டு வந்து அவனுக்குக் கொடுத்து விடுபவர் போல். 'ஹீ...ஹீ' என்று அவன் அவர்முன் பல்லிளித்தாக வேண்டும். 'போய்யா எல்லாம் ஆர்டர் வரும். என்பார் அவர். 'எஜமான் பெரிய மனசு வக்கணும்' என்று சொல்லி விட்டுப் போய் விடுவான் அவன். இப்படி நாலைந்து தடவை நடக்கும்.

நாட்கள் கடந்துவிடும். காலத்துக்கு உழவன் கவலை தெரியுமா? என்றாவது ஒரு நாள் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்திலிருந்து அவனுக்குக் கடிதம் வரும். கிராம சேவகர் அத்தாட்சி பெற்று மீண்டும்மனு செய்தால்மேற்கொண்டு கவனிக்கப்படும் என்று. உழவன் அக்காகிதத்தைக் கொண்டு போய் கணக்குப் பிள்ளையிடமோ முன்சீப்பிடமோ காட்டுவான். 'அதான்வந்திருக்கே கிராம்சேவக்கைப்பிடி' என்பார்கள் அவர்கள். அவன்

[9-ம் பக்கம் பார்க்க]

# மோட்டார் காதல்

மோட்டார் காரைக் கழுவுவது மேற்கு ஜெர்மனியில் சிறந்த பொழுதுபோக்காக ஆகிவருகிறது. மோட்டார் காரின் உரிமையாளர்கள் தங்கள் வேலை நேரம் முடிந்த பின்னரோ, அல்லது விடுமுறை நாட்களிலோ தெரு ஓரத்தில் காரைக்கழுவி சுத்தப்படுத்தும் வேலையில் ஈடுபட்டிருப்பது, ஜெர்மனியில் சாதாரணமாகக் காணப்படும் காட்சியாகும். கார் 'பளபள' என்று சுத்தமாக இல்லையென்றால், மதிப்புள்ள பொருளாக அவர்களுக்குப் படுவதில்லை, இதனால் தங்களுக்கு நேரத்தை மிச்சப்படுத்திக் கொடுக்கும் காருக்காக, தங்கள் ஓய்வு நேரத்தில் கொஞ்சம் செலவழிக்க அவர்கள் தயங்குவதில்லை.

பிராங்க்பர்ட் நகரிலுள்ள விளம்பர மனோநிலை, மார்க்கெட் ஆராய்ச்சி நிலையத்தினர் 'கார் கழுவும்' வேலை குறித்து 'சர்வே' நடத்தினார்கள். மற்ற நாடுகளுடன் ஒப்பிடும்போது, ஜெர்மனியில் அதிகமான கார் உரிமையாளர்கள், தங்கள் கார்களைக் கழுவுகிறார்கள்.

அதாவது ஜெர்மனியில் கார் உரிமையாளர்களில் 75 சதவீதம் பேர், தங்கள் கார்களை அதற்கென உரிய நிலையங்களில் கழுவுவதற்கு அனுப்பாமல், தாங்களே 'சோப்' கலந்த தண்ணீரை ஊற்றி பஞ்சினால் கழுவித் துடைத்து விடுகிறார்கள். 40 சதவீதம் பேர் ஒவ்வொரு வாரமும் தவறாமல் தங்கள் கார்களைக் கழுவுகிறார்கள்.

காரை கழுவி சுத்தம் செய்வதில் நேரத்தையும் சக்தியையும் கார் உரிமையாளர்கள் செலவழிக்கும் மர்மம் என்ன? காரின்மீது அவர்கள் கொண்டுள்ள மாறாத அன்பு! 'காதல்' என்றுகூட சொல்லலாம். இதற்குக் காரணம் என்ன? ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு விரைவாகவும் வசதியாகவும் கொண்டுசெல்ல மட்டுமே கார் பயன்படுவதாக இவர்கள் கருதவில்லை.

கார் வாங்கியதால் சமுதாயத்தில் அவருடைய அந்தஸ்து உயர்ந்துவிடுகிறது. எனவே சமுதாய அந்தஸ்து உயர்வுக்குக் காரணமான காரின் மீது, அந்த உரிமையாளர் 'அன்பு' செலுத்துவதில் ஆச்சரியம் இல்லை அல்லவா?

காரின் 'மாடல், 'பளபள' என்ற எழில் இவற்றைக் கண்டு பெருமிதம் அடையும் கார் உரிமையாளர், சாலையில் தன் காரை வேறுயாராவது முந்திச்செல்ல முயன்றால், அது தன் பெருமைக்கும் மதிப்புக்கும் இழுக்கு என கருதுவார். மற்ற கார், தன் காரை முந்திச் செல்ல விட முடியாதபடி கடும்வேகமாக ஓட்டிச் செல்வதிலும் முனைவார். ஜெர்மனியின் சாலைகளில் சாதாரணமாக 'இப்போட்டி'யைக் காணலாம்.

கார், கார் என்று ஒரே மயக்கமாக இருப்பதைக் கண்டு வெறுப்படைந்த சிலர், நேருக்கு மாறான நடவடிக்கையை மேற்கொள்ள முற்பட்டிருக்கிறார்கள்.

போக்குவரத்துக்காகத்தானே கார் தவிர, வேறு எதற்கும் அல்ல என்ற முடிவில் பார்க்க சாதாரணமாக இருக்கும் காரையே இவர்கள் வாங்கிப் பயன்படுத்துகிறார்கள். இவ்விதக்கார்களை பாலிஷ் போட்டு 'பளபள' என்று அழகுபடுத்தத் தேவையில்லை அல்லவா?

[ யூ. பி. எஸ். ]




ஒலி : 31 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும் | 1966
இதழ் : 33 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஜூலை : 10

## நிர்வாக சிக்கனம்

அரசாங்க இலாக்காக்களும் அமைச்சர்களும் சிக்கனத்தை மேற்கொள்ள வேண்டும் என்பதுபற்றி இரண்டொரு வருடங்களுக்கு ஒரு முறை பேசப்படுவது ஒரு வழக்கமாகியிருக்கிறது. இப்போது பிரதமர் இந்திராகாந்தி சிக்கன வழிகாட்டுகிறார். பெரிய கார்களை உபயோகிக்காமலும் அதிக சிப்பந்திகளை அழைத்துப் போகாமலும் அமைச்சர்கள் இயங்க வேண்டுமென்பது அவர் காட்டும் வழிகளில் ஒன்று.

ஒரு அமைச்சர் பெரிய காரில் போவதும் சிறிய காரில் போவதும் பெரிய விஷயமேயில்லை. அமைச்சர் வந்து போவதால் ஜில்லா, தாலூகா தலை நகரங்களில் கலெக்டர், தாசில்தார் முதல் ஒவ்வொரு இலாகா அதிகாரிகளும் எத்தனைபேர் ரயிலடியிலும், அமைச்சர் தங்கும் இடங்களிலும் வந்து காத்திருக்கவேண்டியிருக்கிறது என்பதைச் சிந்தித்தால் எவ்வளவு வீண் விரயம் ஏற்படுகிறதென்பதைக் காணலாம். அமைச்சர்கள் வந்து போவதைக் கவனித்து ஏற்பாடுகள் செய்கிற காரியமே திருச்சி போன்ற நகரங்களில் அரசாங்க உத்யோகஸ்தர்களுக்கு முழுநேர வேலையாகிக்கொண்டிருக்கிறது. இதில் ஏதாவது கணிசமான மாறுதல் வந்தால் சிறப்பாக இருக்கும். அமைச்சர்கள் வசதியாகப் பெரிய காரிலேயே போய் வருவதால் பெரிய நஷ்டமொன்றும் ஏற்பட்டுவிடாது. உண்மையில் ஓய்வில்லாது உழைக்கும் பொது ஜனத் தலைவர்களான அமைச்சர்கள் உடலைக் வருத்திக் கொள்வது நியாயமுமில்லை. அவர்கள் பெயரால் பல அலுவலர்களின் வேலையும் நேரமும் வீணாகாமல் செய்தால் அது போதுமென்று நமக்குத் தோன்றுகிறது.

## புதிய வாசகசாலை

பெண்களுக்கும் சிறுவர்களுக்கும் பயன்படக்கூடிய நூலகம் ஒன்று 5 லட்ச ரூபாய் செலவில் கட்டுவதென்ற திட்டத்திற்கு திருச்சி சிங்காரப் தோப்புத் தெருவில் அடித்தளக்கல் நாட்டினார் சென்றவாரம் பிரதமர் இந்திராகாந்தியவர்கள். மாவட்ட நூலகஆணைக் குழுவின் சார்பில் நடைபெற்றஇந்தவிழாவில்பேசிய பிரதமர், புதிய பாரதத்தில் பெண்களின் பங்கு முக்யமானதென்பதையும் அவர்களுக்கென்று ஒருசிறப்பான நூலகம் அமைவது பாராட்டுக் குரியதென்றும் கூறினார். நூலக இயக்கத்தில் திருச்சி மாவட்டம் முன்னேறி இப்போது 102 கிளை நூலகங்கள் இந்த மாவட்டத்தில் நடைபெறுகின்றன, மாதர்க்கும் சிறுவர்க்கும் என்று தனிநூலகம் அமைவது இந்த ராஜ்யத்திலேயே முதலாவதாக இருக்கும். மாவட்ட நூலக ஆணைக் குழு நமது பாராட்டுதலுக்கு உரியதாகும்.

# எண்ணெய் நதி

ஸாகலின் என்ற பசிபிக் தீவின் எண்ணெய்வளத்தை நீண்ட காலமாகவே சோவியத் தொழில்துறை பயன்படுத்தி வருகிறது. தற்போது, அங்கு பெரும் அளவு எண்ணெய், எரிவாயுப் படிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. துரிதமாக வளர்ந்துவரும் சோவியத் தூரகிழக்குப் பகுதிக்கு இவை உடனடியாகத் தேவைப்படுகின்றன.

ஸாகலினிலிருந்து, கடலினடியே போடப்பட்டிருக்கும் ஒரு சிறுகுழாயின் மூலம் தற்போது எண்ணெய் கொண்டுவரப்படுகிறது. அந்தக் குழாயும், மிகுந்த கஷ்டத்திற்கிடையே சென்ற யுத்தத்தின் போது போடப்பட்டது.

அந்தக் குழாய் தற்போது மிக ஆழத்தில் சென்றுவிட்டது. அதனைக் கண்டுபிடிப்பதுகூட மிகக்கடினமே.

கடந்த 20 ஆண்டுகாலமாக, அதன் வழியே எண்ணெய் பாய்ந்தோடி வந்துகொண்டிருந்தது. ஆனால், தற்போது புதிய படிவங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருப்பதால், குறுகிய விட்டமுள்ள அந்தக் குழாய், எண்ணெயைக் கொண்டுவரப் போதுமானதல்ல. இதற்காக, பெரிய விட்டமுள்ள குழாய்கள் போடப்படுகின்றன. இந்தப் புதிய குழாய்த் தொடர், ஸாகலினிலுள்ள ஓகாவிலிருந்து, பெரும் தொழில் நகரமான காம் சோமால்ஸ்க்–ஆன்–அமூர் வரை, 380 மைல் நீளத்திற்குப் போடப்படுகிறது.

முதல் 65மைல் தூரத்திற்குப் போடப்பட்டுவிட்டன.

நெவெல்ஸ்கி ஜலசந்தியின் 5மைல் தூரம்தான், இப்பாதையிலேயே மிக மிகக் கடினமானது. முன்பு குழாய் பதிக்கப்பட்டதற்கு அருகிலேயே இப்பொழுதும் அங்கு நீரினுள் பூமிக்கடியே குழாய்கள் பதிக்கப்படுகின்றன. இந்தக் குழாய்களின் வெளிப்புறம் கான்கிரீட்டினால் பூசப்பட்டவையாகும்.

நிலப்பகுதியில் இக்குழாய்கள் போடும் வேலை மிக எளிதாக நடைபெற்று வருகிறது. சோவியத் நிலப்பரப்பிலிருந்து, ஸாகலினைப் பிரிக்கும் லாஸரேவ் முனைக்கு பொறியாளர்கள் விஞ்ஞானிகள் குழுவொன்று சென்றுள்ளது. தற்போதைய தொழில் நுட்ப முறைகளும் மிக உயர்வடைந்திருப்பதால், திறமையுடன் வேலை நடைபெற்று வருகிறது.

பழைய குழாயைப் போட்டுமுடிக்க 20,000பேர் தேவைப்பட்டது. ஆனால் இப்போது கிட்டதட்ட எல்லா வேலைகளும் தானியங்கு கருவிகளின் உதவியுடன் செய்யப்படுவதால், 1000பேர் சேர்ந்தே அந்த வேலையைச் செய்ய முடிகிறது.

இந்தக் குழாய்ப்பாதை கடலையும், சதுப்பு நிலத்தையும், குன்றுகளையும், அகழ் பள்ளத்தாக்குகளையும் தாண்டி வருகின்றது.

200–மைல் நிலப்பாதையில், 450 நீர்த்தேக்கத் தடைகள் உள்ளன.

இப்பாதையைப் போடும் தொழிலாளர்கள் 'இடம் விட்டு இடம் பெயரும்' ஒரு நகரில் வசித்துக் கொண்டுள்ளனர் என்று கூறலாம். அவர்களது வாழ்க்கைக்கு எல்லாசெதிகளும் செய்து கொடுக்கப்பட்டுள்ளன. ஒரு கடை, பொழுது போக்குக் கூடம், வைத்தியக்கூடம், துணி வெளுப்பகங்கள், குளிக்கும் அறைகள் ஆகிய வற்றுடன் கூடிய சிறு நகரம் அவர்களுடனேயே சென்று கொண்டிருக்கிறது.

தடைகளும், இன்னல்களும் பலவிருந்தபோதும், இந்தக் கடினமான வேலையை உற்சாகத்துடன் செய்து கொண்டிருக்கின்றனர் தொழிலாளர்கள்.

விவசாயம்

# கலப்புச் சோளம்

சோளத்தில் நிரம்ப மகசூல் பெற கலப்பு வீரியச் சோளம் (ஹைபிரிட்) சி. எஸ். ஹெச்-1 சிறந்தது.

கோடைப்பயிராகப் பயிரிடுவது நல்லது. பாசனப் பயிராகப் பயிரிட்டால் அமோகமான விளைச்சல் தரும்; சுமார் 6,000 கிலோ ஹெக்டாருக்கு (ஏக்கருக்கு 2,430 கிலோ) மகசூல் கிடைக்கும். இது தவிர ஹெக்டாருக்கு 11,000 கிலோ (ஏக்கருக்கு 450



முறைப்படி பயிரிடப்பட்ட கலப்பு வீரியச் சோளம்

கிலோ) வைக்கோல் கிடைக்கும்.

## நிலத்தயாரிப்பு

நிலத்தை சன்னமாக உழ வேண்டும். ஏக்கருக்கு 15-20 வண்டி தொழு உரம் அல்லது கம்போஸ்ட்டு அடிக்க வேண்டும்.

விதையை அத்தாட்சி பெற்ற நம்பகமான விதை வியாபாரியிடமிருந்து பெறுங்கள். ஒரு பட்டத்தில் மகசூலான விதையை அடுத்தபட்ட சாகுபடிக்குப் பயன்படுத்தக் கூடாது. கலப்பு வீரியம் விதையை உருவாக்கும் போதுகையாளும் சில நுட்பங்களினால் ஏற்படுவது. இது அடுத்த வம்சத்துக்கு தொடர்ந்து வருவதில்லை. ஆகையால் ஒவ்வொரு பட்டத்துக்கும் விதை புதிதாக வாங்கவேண்டும்.

ஏக்கருக்கு 4 கிலோ விதை போதும். வரிசைக்கு வரிசை 18 அங்குலம் விட்டு ஒரு அங்குல ஆழத்தில் விதைக்கவேண்டும். மூன்று நான்கு வாரங்கள் கழித்து செடிக்குச் செடி ஆறு அங்குலம் விட்டு மிகுதியை களைந்துவிட வேண்டும். பாசன வசதி ஏற்படுத்துங்கள்.

## உரமிடல்

விதைக்கும் பொழுது ஏக்கருக்கு 14 கிலோ நைட்ரஜன், 10 கிலோ பாஸ்வரம், 18 கிலோ பொடாஷ் இவைகளை ரசாயன உருவவடிவில் வரிசைக்கு 3 அங்குலம் தள்ளியும் விதைக்கு 3 அங்குலம் கீழும் போடவும்.

## பாசனம்

விதைத்தவுடன் ஒரு பாசனம். விதைத்த மூன்று நாட்களுக்குப் பிறகு ஒரு பாசனம். பிறகு மண்ணின் நிலைக்கு மண்ணின் நிலைக்குத் தகுந்தபடி 7-10 நாள் முறையில் பாசனங்கள் செய்ய வேண்டும்.

விதைத்த 20-ம் நாள் 25-ம் நாளில் களையெடுக்கவும். 30-ம் நாள் 14 கிலோ நைட்ரஜன் அளிக்கவும்.

## பயிற் பாதுகாப்பு

விதைப்பதற்கு முன் கந்தகத்தை விதைக்கு கலந்து விதைக்கவும். இலைகள் சிவந்து வாடினால் கரையக் கூடிய கந்தகத்தை அடிக்கவும்.

கதிர்களுக்கு 5 சதவிகித டி. டி. டியும் 10 சதவிகித பி. எச். ஸியும் கலத்து தூவவும்.

இந்த அபிவிருத்தியான முறைகளைப் பின்பற்றினால் சோளத்தில் சுலபமாக ஏக்கருக்கு 2430 கிலோ மகசூல் பெறலாம் (ஹெக்டருக்கு 6000 கிலோ)

மேலும் விபரங்களுக்கு உங்கள் கிராமசேவக்கையோ அல்லது விவசாய அதிகாரியையோ கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

# சிறுகதைப் போட்டி

பிரிட்டிஷ் பிராட்காஸ்டிங் கார்பொரேஷன் சிறுகதைப் போட்டி ஒன்றை நடத்த உத்தேசித்திருக்கிறது. பிரிட்டனுக்கு வெளியில் வசிக்கும் எழுத்தாளர்கள் மட்டுமே இந்தப்போட்டியில் கலந்து கொள்ளலாம். தேர்ந்தெடுக்கப்படும் கதைகளில் சிறந்த கதைக்கு நூறுபவுன்களும் மற்ற கதைகள் ஒவ்வொன்றுக்கும்தாலா 20பவுன்களும் வழங்கப்படும். இதுவரையில் பிரசுரமாகாத கதைகளையே போட்டிக்கு அனுப்ப வேண்டும். கதை ஆங்கில மொழியில் சுமார் 2000 சொற்களுடையதாக இருக்க வேண்டும்.

போட்டி முடிவு தேதி 31-10-66. அனுப்ப வேண்டிய முகவரி: ஷார்ட் ஸ்டோரி காம்பெடிஷன், பி. பி. ஸி. ஓர்ல்டு சர்வீஸ், புஷ் ஹவுஸ், லண்டன், டபிள்யூ. ஸி. 2.

போட்டிக்கு வரும் கதைகளை பின்கண்டவர்களடங்கிய நடுவர்குழு பரிசீலனை செய்யும்: திரு. லென்ரீ பீட்டர்ஸ், கவிஞர் - நாடகாசிரியர்; திரு. கே. ஃபுல்லர், எழுத்தாளர் - பி. பி. ஸி. நிகழ்ச்சி தயாரிப்பாளர்.

——

# மதுரையில் ஸிண்டிகேட்

மணிபாலில் தலைமையகத்தை கொண்டுள்ள ஸிண்டிகேட் பாங்க் லிமிடெட் தனது புதியகிளை ஒன்றை மதுரை நகரில் 72, தெற்குமாசி வீதியில் 30-6-66 அன்று திறந்துள்ளது. இத்துடன் ஸிண்டிகேட் பாங்கின் கிளைகள் 210 ஆக உயர்ந்துள்ளன.

சிந்தனைக்கு :

# சிரிப்பதா ? அழுவதா ?

— பரதேசி.

சிலநாட்களாக (மாதங்களாகவோ?) ப்பத்திரிகைச் செய்திகளைத் தொடர்ந்து படிக்கிறவர்கள் இந்நாட்டின் பரிதாபநிலையை எண்ணிக் கண்ணீர் சிந்தும் நிலை ஏற்பட்டிருக்கிறது!

அந்நிய நாடுகளிலிருந்து அவை எவ்வளவு சிறியவைகளாக இருந்தாலும் பாதகமில்லை - உதாரணம்: ஸ்வீடன் கடனையும் உதவியையும் அவர்களிடமேவாங்கிய கடனுக்கு வட்டி கட்டுவதற்கான உதவியையும் உணவுப் பொருளையும் ஒருபுறம் தொடர்ந்து வாங்கிக் கொண்டிருக்கிறோம். அந்த உணவுப் பொருள்கள் கடற்கரையில் எத்தனையோ தொல்லைகளைத் தாண்டி வந்து காத்துநிற்கின்றன. கப்பலிலிருந்து இறக்க வேண்டியவர்கள் 'அம்பேல்' விட்டுவேடிக்கை பார்க்கிறார்கள்.

இன்னொருபுறம் 'நீபோட்டுக்கறயா அம்மா! உனக்கு அஞ்சுரூபா அன்பளிப்பு' என்றுவீதியில் போகிற வருகிற பெண்களையெல்லாம் வழிமறிக்காத குறையாக 'லூஃப்' என்கிற கண்றாவிப் பிரசாரத்தை முழுமூச்சுடன் செய்துகொண்டிருக்கிறோம். இதற்கும் யாரோ 'அர்ரிக்கா ஸ்வாமி' தான் மனித உருவத்தில் அவதரித்து நம் (கான்பூரோ — பூனாவோ) ப்ளாஸ்டிக் பிரம்மதேவன் தொழிலுக்கு 'ரிட்' வாங்கும் புழு உற்பத்தி விலையை (ஸார்! ஸார்! இந்தப் புதுப் பெயர்கண்டுபிடிப்புக்குயாரிடமாவது சிபாரிசு செய்து ஒரு பரிசுவாங்கித் தரப்படாதா ஸார்?) உற்பத்தித்திறனில் முழுவேகமுள்ளதாகச் செய்ய முனைந்திருக்கிறார். இதே சமயத்தில் தினந்தவறாமல் 30பேர், 40பேர், 50பேர், 60பேர் நூறுபேரென்று ஆளைக்காலி செய்யும் பயங்கர ரயில்விபத்துக்கள் சொல்லிவைத்தாற் போல் கண்ணெதிரே தவறாமல் நடந்து கொண்டிருக்கின்றன. விபத்துக்களின் மூலம் சாகிறவர்கள் சிறு குழந்தைகள் மட்டுமல்ல - உதவாக்கரைகளல்ல அவர்கள் பெரியபெரிய தொழிற்பிரமுகர்கள்—தேசபக்தர்கள் அவர்கள், இவர்கள் (ஐயோ! நீங்கள் ரயிலேறிப் போகாதீர்கள் ஸார்! உங்களுக்கு நான் மணிவிழா நடத்தக் காத்திருக்கிறேனே!

நான்விசாரித்தறிந்தவரையில் ரயில்விபத்துக்கு தேசபக்திக் குறைவு மட்டுமல்ல காரணம் தேசத்துரோகக்கட்சி மனப்பான்மையுந்தான் காரணம் என்றறிகிறேன்!

ஒருநண்பர் (அவர் ஒருவேளை எதிரியாகவும் இருக்கலாம்)சொன்னார்—ரயில்வே இலாகாவில் மேல்மட்ட அதிகாரிகள் காங்கிரஸ்காரர்களாம். அவர்களின் கீழ் வேலை செய்கிறவர்கள் குறுகிய நிலப்பற்றுள்ள எந்தெந்தக் கட்சியையோ சேர்ந்தவர்களாம். அவர்கள் கட்டளைப்படி பிரயாணிகளின்உயிரைப் பாதுகாத்து ரயிலைத் தண்டவாளத்தின் மீது ஓடச்செய்கிற- அதற்கு உதவிசெய்கிறவர்கள் பெரும்பாலும் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்களாம். (வலதோ—இடதோ அடியேனறியேன் பராபரமே!) பிரயாணம் செய்கிற பாவிகளாகிய நாம் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலென்ன கூண்டோடு கைலாசமோ வைகுந்தமோ போய்ச்சேருகிறோம்.

இதையாவது சகித்துக் கொள்ளலாம். 14மாடிக் கட்டிடத்தில் முதல் தளத்தில் விரிசல் கண்டாற்போல நர்மையாளும் மாட்சிமை தங்கிய ஆளும் கட்சியாளர்களிடையே மாநிலத்துக்கு மாநிலம் கருத்துவேற்றுமை ஒழிக்க முடியாத புற்றுநோயாகப் பரவிவருகிறது.

அவர்கள் இப்போது குழியில் போட்டு மக்கிமறைந்த பிள்ளைகளின் எலும்புகளைத் தேடி எடுத்து வைத்துக் கொண்டு எல்லைப்பிரச்னை ஒப்பாரியைத் தொடங்கியிருக்கிறார்கள். ரத்தம் சிந்தும் விளையாட்டுக்களிலும் ஈடுபட்டிருக்கிறார்கள்!..மணிவிழாக் கண்ட மாபெரும் தலைவர் திரு மா. பொ. சி கூட நன்றியுரையில் சிறு அதிர்வெடி வைத்திருக்கிறார். மறுபடியும் ஆங்காங்கே எப்போதோ தீர்ந்துபோன எல்லைப் பிரச்னைகளை மீண்டும் கிளப்புவதனால் (மீசைதுடிக்கிறது அவருக்கு) மீண்டும் நான் தமிழகத்தோடு சேர்க்கவேண்டிய—கேரள—ஆந்திர—மைசூர்—வயிற்றில் சேர்ந்த பகுதிகளுக்காகப் போராடத்தயார் என்கிறார்.

எனக்குச் சிரிப்பு வருகிறது! எல்லாரும் பெரிய தத்துவம் பேசுகிறவர்கள். பிடி மண்ணைக்கூட பிறக்கும் போது கொண்டுவராதவர்கள்—போகும்போதும் கொண்டு போகப்போவதில்லை என்பது நன்கு தெரியும்-எல்லா இனத்தாரும் எல்லாசாதி மக்களும் அவர்கள் எந்தமொழிபேசி எந்த மூலையில் வாழ்ந்தாலும் இந்தியத் தாயின் வயிற்றில் பிறந்ததால் நம் சோதர சோதரிகளே என்பதை நன்குணர்ந்தவர்கள்.

இவர்கள் இப்படியெல்லாம் நாட்டின் நாசகர வேலையில் ஈடுபடுவதானல் பாவம்! பாரதத்தாயின் செல்வப் புதல்வி முதன்முதலாகப் பதவியில் தாயின் அந்தஸ்துக்கு உயர்ந்து அப்பாவைப் போலவே வெள்ளை மனதைத் திறந்து கொட்டிப்பேசும்நாடெங்கும் பவனிவந்து அயல் நாடுகளுக்கும் விஜயஞ்செய்து வரும் ஸ்ரீமதி இந்திரா காந்தி தான் என்ன செய்யமுடியும்? கடவுள்—அவர் நம்கட்சியில் அக்கறை காட்டாமல்—நம் எல்லோரையும் காப்பாராக.



**வலங்கிமான் டி. மு. கோ.**

S. C. 12/63

குடந்தை டவுன் மேல காவேரி ரகோஜி பண்டிதர் தெரு சக்ரபாணி அய்யங்கார் மனைவி C. சூடாமணி அம்மாள் —வாதி

குடந்தை Tk. துக்காச்சி குமாரமங்கலம் அழக படையாச்சி மகன் A. நாராயணசாமி படையாச்சி —பிரதிவாதி

ஷ வாதிக்கு டிகிரிப்படி வரவேண்டிய துகை வகையறுவுக்கு பிரதிவாதிக்கு சொந்தமான ஸ்தாவர சொத்துக்களை ஏலத்திற்கு கொண்டுவருவதில் ஷ பிரதிவாதிக்கு ஏலநோட்டீஸ் சர்வாகாததால் ஒட்டி சர்வு செய்ய உத்திரவாகி 15-7-66-ல் ஈரங்கி. ஆக்ஷேபணையை அன்று காலை 10மணிக்கு கோர்ட்டில் தெரிவிக்காவிடில் ஒருதலைப்பட்சமாய் தீர்மானிக்கப்படும்.

C. J. சடகோபன்
1/7078/32 அட்வகேட்

**வலங்கிமான் டி. மு. கோ.**

O. S. 73/66

குடந்தை Tk. சுவாமிமலை தெற்கு வீதி குப்புசாமி பிள்ளை மகன் K. சுந்தரம் —வாதி

சீர்காழி கொண்டத்தூர் அய்யாறு படையாச்சி மனைவி ஜானகியம்மாள் —2ம் பிரதிவாதி

ஷ 2ம் பிரதிவாதிக்கு வாதியால் பெந்தகப் பத்திரப்படி ரூ. 1981-88 கிடைக்க செய்ததவா 19-7-66-ல் ஈரங்கி. அன்று காலை 10மணிக்கு கோர்ட்டில் ஆக்ஷேபணையை தெரிவிக்காவிடில் எஸ்க்பார்ட்டியாக தீர்மானிக்கப்படும்.

R. லக்ஷிமிபதி
4/7081/35 அட்வகேட்

[4-ம் பக்கத் தொடர்ச்சி]

கிராமசேவகரிடம் ஓடியாக வேண்டும்.

அவரை அவனுல் பிடிக்க முடியுமா? அவர் கிராமத்துக்குக் கிராமம் சென்று சேவை(?) செய்கிருரே? எங்கேயாவது அவரைத் தேடிப்பிடிப்பான். 'நீபோ!.. உங்க ஊருக்கு வர்ரபோது பார்த்துக்கறேன்.' என்பார். 'கிணறில்லாம ஒண்ணும் முடியாதுங்க...'பார்த்து ஏதாவது செய்யணும்.' மீண்டும் கைகட்டித் தலைசொரியும் படலம். 'அதான் சொல்றேனே...போவேன்!'— அவர் 'வள்'ளென்று விழுவார். 'எஜமானு'க்குக் கோபம்வந்துவிடக்கூடாதே என்று அவன் திருப்புவான்.

கிராம சேவகர் வருவார். கணக்கப்பிள்ளை வீட்டில் அமர்வார். உழவன் மீண்டும் ஒருமுறை அவரிடம் காவடியெடுப்பான், கணக்கப்பிள்ளை கண்காட்டுவார். அப்பொழுதே வந்து அளவெடுத்து அத்தாட்சியைத் தந்தால் அவர் கௌரவம் என்ன ஆகும்? இரண்டு மூன்று தடவை பாய்ச்சல் காட்டிவிட்டு இறுதியாக 'ஏதாவது' வாங்கிக் கொண்டு அளவெடுத்துக் கொடுப்பார். மறுபடியும் 'அப்ளிகேஷன் — பஞ்சாயத்து யூனியன் ஆபீஸ் ஆகியவை. அடுத்தப்படலம் 'லோன்' தாசில்தாரையும் 'லோன் கிளர்க்'கையும் பிடித்தாக வேண்டும். கருவேப்பிலையை பிழிந்து சாறெடுத்துவிடலாம் 'லோன்' தாசில்தாரை வரவழைக்கப் பகீரதப் பிரயத்னம் செய்தாகவேண்டும். 'லோன் அப்ளிகேஷன்' பாரத்தை வாங்கிக் கொண்டு கிராமத்துக்குப் போய் கணக்கப்பிள்ளை வீட்டில் தன்னை எதிர்பார்க்கச் சொல்வார்.

'கஞ்சி வரதப்பா!..எங்கே வருதப்பா?' என்பது போல அவருக்காக அவன் காத்திருப்பான். அவர் வரமாட்டார். மீண்டும் பஸ் செலவு, உணவுச் செலவு ஆகியவற்றைப் பாராமல் அந்த விவசாயி சிரமத்தை நோக்காது பஞ்சாயத்து யூனியன் ஆபீஸே கதி என்று கிடப்பான். கணக்கப்பிள்ளையும் அவன் காதைக் கடித்தே அனுப்புவார். 'ஒண்ணும் கொடுக்காமரொக்கமா ஆயிரம் வாங்க முடியுமா? என்பார்; 'அதை'யும் எடுத்துப் போய்க் கொடுத்துத் தொலைப்பான். அவர் மனதில் கொஞ்சம் கருணை ஊறும். கணக்கப்பிள்ளையைக் கூட்டிக்கிட்டு வா?... என்று சொல்வார், கணக்கப்பிள்ளை வீட்டுக்கு வருகிறேன் என்று சொன்ன மகானுபாவர். அங்கேயிருக்கும் 'லோன் கிளார்க்' கண்ணுலேயே பேசி 'அதுக்கு' வழி போட்டுவிடுவார், பணத்தை எதிர்நோக்கிடும் அப்பாவிக்குடியானவனிடம்.

'பாரம்' பூர்த்தியாகும் வேலை நடக்கும். கணக்கப்பிள்ளை உடனிருந்தாக வேண்டும். அவருக்கும் 'கொடுத்து' அழைத்து வருவான். எல்லா எழுத்து வேலைகளும் கையெழுத்துகளும் முடிந்த சமயம் பார்த்து கமிஷனர் 'கேம்ப்' போய்விடுவார். அவர் வரும் வரை கடன் வாங்கும் அவ்விரதத்துக்குரியவன் காத்துக்கிடப்பான். 'ஆர்டரை'யும் கையெழுத்தாக்கி முடித்துவிட்டு ஒருவழியாக முன்சீப்புக்கு (சைவ) பிரியாணி வாங்கிக் கொடுத்துக் கையோடு அழைத்துக் கொண்டு தாலுகா ஆபீஸ் ஓடுவான். தாலுகா ஆபீஸில் சம்பந்தப்பட்ட குமஸ்தா, 'என்னய்யா அவசரம்? போய்யா வெளியே!.. கூப்பிட்டதுக்கப்புறம் வாய்யா' என்பார், அங்கே ஓரத்தில் கூனிக்குறுகி எண்சாண் உடம்பும் ஒருசாணுகி நிற்கும் மனிதப்பிறவியிடம். அவனுக்காகத்தான் தன்னை சம்பளம் கொடுத்து வேலைக்கு வைத்திருக்கிருர்கள் என்பதை அவர் உணர்வதில்லை. வெள்ளைச்சட்டை போட்ட அவரும் வெள்ளைச் சட்டை போடாத வெள்ளை மனத்தானிடம் வெள்ளையப் பணை எதிர்பார்க்கும் கள்ளப் பரம்பரையின் ஒரு துளிதானே! (நல்லவர்கள்., மன்னிக்க) 'தள்ளு, அவரிடம் கொஞ்சம் தள்ளு!' என்பார் கூட வந்த முன்சீப்— யாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்னும் 'பெரு' நோக்காளர் அவர். எல்லாம் முடிந்தது. டிரஷரிக்கு வந்து வில்லையை வாங்கி ஸ்டேட் பேங்க் சென்று பணம் வாங்கியாய் விட்டது... ஆயிரம் என்றே வைத்துக்கொள்வோமே!... கூடவந்த முன்சீப்பின் கையும் நீளும்... ஐம்பதோ அறுபதோ முடிந்தது.'அப்பாடா வாங்கியாச்சு!' உழவனின் பெருமூச்சு.

'உழவன் கணக்குப்பார்த்தால் உழக்குக் கூட மிஞ்சாது' என்பார்கள். கடன் வாங்கவேண்டுமென்று என்றைக்கு நினைத்தானே அன்றிலிருந்து கடன் வாங்கி முடித்த நாள் வரை எல்லா செலவுகளையும் — அங்கே இங்கே கொடுத்ததைக் கூடத்தான் — சேர்த்துக் கணக்கிட்டானுனல் 'கடன் எனக்காக வாங்கினேனு? அவங்களுக்காக வாங்கினேனு?' என்று தன்னைத் தானே பலமுறை கேட்டுக் கொள்வான். கிணறு வெட்டப் பூதம் கிளம்பும் என்பார்கள். கிணறு வெட்டக் கடன் வாங்கினுலும் பூதம் கிளம்புமோ?

நாடு உணவுப் பிரச்னையை நோக்கியிருக்கிறது. பிரச்னையைப் போக்க எண்ணற்ற திட்டங்கள் வகுக்கும் அரசினர் அவைகள் ஒழுங்காக நிறைவேற்றப் படுகின்றனவா என்பதை நோக்குவதில்லை. கடன் பணம் உழவனுக்கு மட்டுமா? அல்லது கடனை வழங்க ஏற்பாடு செய்யும் — வழங்கும் — கடன் துறையினருக்குமா? கடன் வகையில் நேரும் இவ்விடர்ப்பாடுகளை களைந்தெரிவது அரசாங்கத்தின் கடன்.

கடன்களைப் பற்றி மிகவும் சுலபமான எளிய எண்ணம் அனுபவமில்லாதோர்க்கு இருக்கக் கூடும். அவர்கள் கொஞ்சம் 'லோனுக்கு' 'அப்ளை' பண்ணித்தான் பார்க்கட்டுமே,

—

# முற்போக்கு விவசாயம்



முதல்போகத்துக்கு ராஜு வயலை சீர்படுத்துகிறார்.

கல்வி புகட்டுவதும், கலப்பை பிடிப்பதும் வெகு வெகு எட்டிய உறவுள்ள தொழில்கள் எனபலர் நினைக்கலாம். ஆனால் நரசிம்ம ராஜுவுக்கு இவ்விரண்டும் உள்ளத்தில் நெருங்கிய உறவு கொண்ட தொழில்கள். இந்த உபாத்தியாயரான உழவர் முப்போக நெல் விளைவித்து பெயர் சம்பாதித்துக் கொண்டார்.

ஆந்திர பிரதேச விவசாயி இவர். தன் கிராமமான நாயலத்தில் ஹெக்டர் ஒன்றில் ஆண்டுக்கு 116 குவிண்டல் நெல் விளைவித்தார் இவர். சாதாரணமாக இந்தப் பிராந்திய விவசாயிகள் இருபோகம் தான் செய்வது வழக்கம்; ஜூன்—நவம்பரில் ஒருபோகம்; ஜனவரி—மேயில் இரண்டாம் போகம்.

ராஜு எஸ். எல். ஓ. டி. என்ற விரைவில் முதிரும் நெல் வகையை தேர்ந்தெடுத்து நவம்பரில் அறுவடை செய்தார். இவ்வாறு முதல் போகத்திலிருந்து காலம் கடன் வாங்கி மூன்றாம் போகத்திற்கு செலவிட்டார்!

ராஜு விஸ்தரிப்பாளர் ஆலோசனைகளை ஏற்று நிரம்ப உரமிட்டு திருந்திய செய்நேர்த்திகளை செய்தார்.

நாற்றங்காலுக்கு ஹெக்டாருக்கு 2·5டன் தொழு உரம் இட்டார். வயலுக்கு 22·5 டன் தொழு உரமும், 125 கிலோ அமோனிய சல்பேட்டும் இட்டார். நடவான மூன்று வாரங்களுக்குப் பிறகு 50 கிலோ யூரியாவும் இட்டார்.

விதைகளுக்கு அக்ரோஸான் ஜீனை கலந்து விதைத்தார். அப்படியிருந்தும் இரண்டு தடவை நாற்றுக்கு கொடிரின் தெளித்தார். நடவுக்கு முன்னால் நாற்றுகளை என்டிரினில் நனைத்து நட்டார். பயிருக்கு இரண்டு தடவைகள் என்டிரின் தெளித்தார்.

'பாசனத்தில் நான் வெகு கவனம் செலுத்தினேன். நான்கு தினங்களுக்கு ஒரு முறை தண்ணீரை வடித்து புதிய நீர் கட்டினேன். 5.8 சென்டிமீட்டர் உயரத்துக்கு மேல் வயலில் தண்ணீரை ஏறவிடுவதில்லை,' என்றார் ராஜு.

முதல் பயிர் ஹெக்டாருக்கு 47 குவிண்டல் தந்தது.

முதல் பயிர் அறுவடை செய்ய மூன்று தினங்கள் இருக்கையிலேயே களப்பை வயலில் ராஜு விதைத்தார். ஆறடி உயர்ந்த களப்பில் மேல் மூன்றடியை வெட்டி தீவனமாக்கினார். பாக்கியை மண்ணோடு உழுதார். வேறு உரமிடவில்லை. இரண்டாவது போகத்தில் ஹெக்டாருக்கு 37 குவிண்டல் கிடைத்தது. இதுவும் எஸ் எல் ஓ 19 விதை தான்.

இவ்விதம் பயிரிட்ட நிலங்கள் சராசரி ஹெக்டருக்கு 32 குவிண்டல் ஈன்றன. 'இது என்ன பிரமாதம் யாரும் சிரமப்பட்டால் முப்போகம் செய்யலாம்' என்கிறார் ராஜு.



ராஜுவும் விஸ்தரிப்பாளரும்.

## ஆணையிடுவது யார் ?

கடந்த இரண்டு தலைமுறை காலத்தில் பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளில் மணவாழ்க்கையின் அடிப்படையில் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. குடும்பத்தில் கணவன் 'சர்வாதிகாரம்' செய்துகொண்டிருந்தது போய், மனைவிக்கும் சமமான அதிகாரங்களும், உரிமைகளும் கிடைத்துள்ளன.

தற்போதைய குடும்பங்களில் 'அதிகாரங்கள்' எவ்விதம் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கின்றன என்பது குறித்து ஜெர்மனியில் 'சர்வே' நடத்தினார்கள். கணவனின் வருமானத்தையும் படிப்பையும் பொறுத்ததே, இது என்பது தெரிய வந்துள்ளது. அதிகம் சம்பாதிக்கும் மெத்தப் படித்த கணவனுக்கு குடும்பத்தில் நிறைய அதிகாரம் இருக்கிறது; ஆனால் அதே சமயத்தில் கணவன், குறைந்த படிப்புக்காரனாகவும் குறைந்த வருமானமுள்ளவனாகவும் இருந்தால், கணவனையே ஏவி மனைவி அதிகமாக அதிகாரம் செய்கிறாள். இருவரும் சமமாகப் படித்திருந்தால், 'அதிகாரம்' செலுத்துவதிலும் சமமாக நடந்துகொள்கிறார்கள். கணவனும் மனைவியும் கலந்தாலோசித்தே முக்கிய முடிவுகளை மேற்கொள்கிறார்கள்.

குடும்ப வருமானத்தை யார் நிருவகிக்கிறார்கள்? 65 சதவீத தொழிலாளர்கள்; தாங்களே பணத்தை வைத்துக்கொண்டு, மனைவிக்கு அவ்வப்போது செலவுக்குத் தருகிறார்கள். ஆனால் 'வெள்ளைச்சட்டை' ஊழியர்களின் குடும்பங்களில் 69 சதவீதம்பேர், மனைவிகளிடமே பணத்தைக்கொடுத்துவிட்டு அக்கடா என்று இருக்கிறார்கள். ஏராளமான நடுத்தரமான பணக்கார குடும்பங்களிலும் இதே நிலைதான் நிலவுகிறது. (யூ. பி. எஸ்)

| 1964 Rs. Ps. | | Rs. Ps. | Rs. Ps. |
|---|---|---|---|
| 1,919 00 | Add: Profit for the ... from the Profit and Loss Account ... | 2,910 54 | 3,329 87 |
| | 10. CONTINGENT LIABILITIES: | | |
| | Gratuity to Employees Rs. 1,250/- on winding-up of the Bank. | | |
| | TOTAL ... | | 84,387 76 |

| 1964 Rs. Ps. | | Rs. Ps. | Rs. Ps. |
|---|---|---|---|
| | ...TANCES, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS PER CONTRA : | | |
| | 8. PREMISES LESS DEPRECIATION : | | |
| | 9. FURNITURE & FIXTURES: | | |
| | At cost as per last Balance Sheet ... | 210 00 | |
| | Add: Additions in the year ... | | |
| | Less : Depreciation written of ... | 65 00 | 145 00 |
| | 10. OTHER ASSETS INCLUDING SILVER : | | |
| 2,607 00 | Income-tax advances ... | 2,775 81 | |
| 2,130 00 | Interest accrued on Investments ... | 1,390 00 | |
| 6,210 00 | Interest accrued on loans ... | 9,909 94 | |
| 25 00 | Other advances including staff salary advances ... | 25 00 | 14,100 75 |
| | 11. NON-BANKING ASSETS ACQUIRED IN SATISFACTION OF CLAIMS : | | |
| | 12. PROFIT AND LOSS : ... | | |
| | TOTAL ... | | 84,387 76 |

தனமும் தொடர்ந்து ஆத... கோருகிறேும்.

4. ஆடிட்டர் அவர்கள் பங்குதாரர்களுக்கு கொடுத்துள்ள தனித்த ரிபோர்டும் அதற்கு நிர்வாக சபையார் விளக்கமும் இத்துடன் பங்குதாரர்களுக்கு அனுப்பியுள்ளோம்.

5. பங்குதாரர்கள் எல்லோரும் மஹாசபை மீட்டிங்குக்கு தயவுசெய்து வந்திருந்து பாலன்ஸ் ஷீட்டு, லாப நஷ்ட கணக்கு ஆடிட்டர் ரிப்போர்டுகளையும் அங்கீகரித்தும் மீட்டிங்கு நோட்டீஸில் கண்ட விஷயங்களை தீர்மானிக்க வேணுமாய் கோருகிறேும்.

இப்படிக்கு,

நிர்வாக சபையார்
உத்திரவுப்படி

M. V. Srinivasan,
PRESIDENT.

சேலம்,
19-5-1966.

## PROFIT AND LOSS ACCOUNT FOR THE YEAR ENDING 31—12—65

| 1964 Rs. Ps. | EXPENDITURE | Rs. Ps. | 1964 Rs. Ps. | INCOME: (Less Provisions made during the year for bad and doubtful debts and other usual or necessary provision) | Rs. Ps |
|---|---|---|---|---|---|
| | 1. To Interest paid on deposits, Borrowings etc. ... | | 4,949 00 | 1. Interest and discount ... | 6,195 77 |
| | 2. To Salaries, allowances, and Provident Fund .. | | | 2. Commission, exchange and Brokerage ... | |
| 250 00 | To Secretary and Manager .. | 250 00 | | 3. Rents ... | |
| 2,234 00 | To Other Staff .. | 2,234 00 | | 4. Net Profit on sale of investments, Gold and Silver, Land premises and other Assets (not credited to reserves or any particular fund or account) .. | |
| 61 00 | 3. Directors' and Local Committee Members fees and allowances .. | 57 00 | | | |
| | 4. Rent, Taxes, Insurance, Lighting etc. .. | | | | |
| 365 00 | Rent and Lighting .. | 357 95 | | 5. Net Profit on revaluation of investments, Gold and Silver, Land premises and other assets (not credited to reserves or any particular fund or account) ... | |
| 8 00 | Profession tax .. | 4 00 | | | |
| | 5. Law charges ... | | | | |
| 16 00 | 6. Postage, Telegrams etc. .. | 19 50 | | | |
| 90 00 | 7. Audit Fees .. | 90 00 | | | |
| | 8. Depreciation on and repairs to Banking Company's property . | | | 6. Income from Non-Banking assets and profit from sale of or dealing with such assets. ... | |
| 363 00 | 9. Stationery, Printing, Advertisement, etc. .. | 215 61 | | | |
| | 10. Loss from sale of or dealing with Non-banking Assets .. | | 120 00 | 7. Other receipts ... | 196 09 |
| | 11. Other expenditure .. | | | 8. Loss, if any ... | |
| 213 00 | Contingent expenses & Travelling expenses .. | 158 26 | | | |
| 30 00 | Filing fees .. | 30 00 | | | |
| 92 00 | Allowances .. | | | | |
| 104 00 | Depreciatioen written off .. | 65 00 | | | |
| 1,242 00 | 12. Balance of profit .. | 2,910 54 | | | |
| | Note: Particulars of Remuneration relating to manager | | | | |
| | Bonus Rs. 250 00 | | | | |
| | Sitting fees Rs. 10 00 | | | | |
| | Rs. 260 00 | | | | |
| | Others Nil | | | | |
| | Total .. | 6,391 86 | | Total .. | 6,391 86 |

(Sd) M. V. SRINIVASAN,
President.

Directors:
(Sd) K. GANGARAM,
" புட்டா தேவேந்திரய்யர்,
(Sd) K. V. MANNARSAMY,
" B. V. RANGANAYAKULU.

(Sd) மன்னி, ந. கஸ்தூரிரங்க பாகவதர்.
Hony. Manager.

AUIDTOR'S REPORT: I have audited the annexed Balance Sheet of the Salem Mercantile Bank Ltd., as at 31st December, 1965 and also the annexed Profit and Loss Account of the Bank for the year ended on that date and SUBJECT TO MY SEPARATE REPORT to the Share-holders I report that :- (a) I have obtained all the information and explanations which to the best of my knowledge and belief were necessary for the purpose of my audit and have found them to be satisfactory. (b) The transactions of the Bank which have come to my notice have been within the powers of the Bank. (c) In my opinion proper books of accounts as required by law have been kept by the Bank so far as appears from my Examination of those books. (d) The Bank's Balance Sheet and Profit and Loss Account dealt with by this report are in agreement with the books of account. (e) In my opinion and to the best of my information and according to the explanations given to me, the said accounts give the information required by the Companies Act, 1956 in the manner so required for Banking Companies and on such basis the said Balance Sheet gives a true and fair view of the state of affairs of the Bank as at 31st December, 1965 and the Profit and Loss Account gives a true and fair view of the profit for the year ended on that date.

SALEM, 11—5—1966.

P. NATARAJAN, Chartered Accountant.

# வாழ்வியல் ...

— எம். அழகர்சாமி.

## மயக்கமும், திரையும்

கடலில் விழுந்த பொருளானது, சில தடவை அலைகளால் வெளியே தள்ளப்படுவதும் - சிலசமயம் கரையின் மேற்பகுதிக்கே ஒதுக்கப்படுவதும் உண்டு. ஆனால் மிகச் சிலவற்றிற்கே இந்த விதி விலக்கு. பெரும்பாலான பொருட்களனைத்தையும் கடல் அரக்கி, தன் அலைக்கரங்களால் அலைக்கழித்து தனது அகன்ற பெரும் வயிற்றுக்கே உணவாக்குகிறாள்.

வாழ்வியலில் வாழ்ந்தது போதும் என்ற ஆசையை உதறித்தள்ள எண்ணுவோரின் முடிவும் இதேதான்'

'கானலை'ப் போன்ற வாழ்வைக் காணப்பெரும் தாகமளிப்பது இறையின் மயக்கம்; அதே இறைதான் பின்னே நடப்பவற்றை மறைத்திருக்கும் திரையும். மயக்கமும் திரையும் மனித வாழ்வை இயக்குவிக்க இறைவன் கையாளும் இரண்டுவித கருவிகள்.

## அதிர்ஷ்டசாலிகள்

குழந்தைக்கு மிட்டாயைக் காட்டி வழிநடத்திச் செல்வது போல், வாழ்க்கையனுபவம் கண்ணாமூச்சி காட்டுகிறது. அந்தத்தீராத விளையாட்டினால் மனித மனத்தில் எண்ணிலடங்காக் கனவுகளும் கற்பனைகளும்தோன்றிக்கொண்டேயிருக்கின்றன. ஆயினும் சிலருடைய வாழ்வில்மட்டும்தான் அந்தக் கனவும் கற்பனையும் 'உயிர்ப்பு' பெறுகின்றன. அவர்களைத்தான் அதிர்ஷ்டசாலிகள் என்கிறோம்.

## வாழவைக்கிறது.

மனிதன் செல்வத்தால் உயர்ந்தவனாக வேண்டிய தில்லை. எண்ணத்தால் உயர்ந்தோனானால் போதும் ஆடம்பரமாகத்தான் வாழ வேண்டுமென்பதில்லை; மனத்தால் பரிசுத்தவாழ்வு வாழ்ந்தால் போதும். அந்த உயர்ந்த நிலையான வாழ்வுதான் அவனது மறைவுக்குப் பின்னும் இவ்வுலகில் அவனை வாழவைக்கிறது.

## மாற்று ஏது ?

குறையில்லாத மனிதனில்லை. ஒருவனுடைய இயற்கைக் குறையை எள்ளக் கூடாது. தவறிழைக்காத மனிதனுமில்லை. அறியாமல் செய்த பிழையை மன்னிக்க வேண்டியது மனித மாண்பு. ஆனால், தன்னிடத்து அதிகமான குறையிருந்தும் அதை உணராமல்— பிறரது சிறிய குறையை எள்ளும் சின்ன மனம்படைத்தோரை என்ன செய்வது? அதே போல் பலவும் கற்று, உணர்ந்து, தெளிந்தவரே தன்மனதாரக் கயமைத்தனத்தையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்கிறானென்றால், அவரைத் திருத்துவோர் யார்?

## கலைகள் ஏன்?

மனிதவாழ்க்கைக்கு இனிமையும் பயனும் அளிக்கவே கலைகளும், கவிதை, கதைகளும் ஆக்கப்பட்டன. அதுவே பின்னர் மனிதனைத் தெய்வமாக்கும் பிரச்சாரத்திற்கும், இளமையின் உணர்வோட்டங்களைச் சித்திரித்துக் காட்டும் கிளர்ச்சிமிக்க ஆபாசங்களுக்கும் இடமாகி விட்டிருக்கின்றன.

## வழிபாடு

மன அமைதிக்காகத் தனக்குப் புலப்படாத ஒரு சக்தியின்பால் உள்ளத்தை ஒப்படைத்தான் மனிதன். அப்படித்தோன்றிய இறை வழிபாடுதான் ஆலய வழிபாடுகளாக வளரலாயிற்று.

## லட்சிய வாதியின் வாழ்வு!

லட்சியவாதியை அவனது லட்சியம் தான் வாழவைக்கிறது. லட்சிய உணர்ச்சி, எரிதீயில் எண்ணெயைப் போல, அழிக்க அழிக்க வளரக் கூடியது. அந்த லட்சியம் அழிக்கப்படுமானால் லட்சியவாதியின் உயிரும் கொஞ்சங் கொஞ்சமாகப் பிரிந்து விடும்.

## நம்கடமை

ஆக்கலும் அழித்தலும் அவன்செயல் தான். எனினும் நம்கடனை நாம் உணருதல் வேண்டும். சிந்திக்கும் திறனும் செயல்படுத்தும் ஆற்றலும் நமக்குத் தெய்வத்தால் அமைக்கப்பட்டது. அவற்றை வீணாக்கவோ, தீமையாகவோ விட்டுவிடாது, படைப்பின் அருமையைப் புரிந்துசெயற்படுத்துவது நம்கடமை.

——

[ 1-ம் பக்கத் தொடர்ச்சி ]

கிறோம். அது ஒரு கவிதையாகவோ, இயந்திரமாகவோ, பாலைவனத்திலே ஒரு பழத்தோட்டமாகவோ புதர் அடர்ந்த காட்டிலே சிறிய தடமாகவோ இருக்கலாம். எமது எழுச்சியின் விளைவாகத் தோன்றிய கனிகளை, எமது பாதையிலே விட்டுச் செல்கிறோம்.

இந்தப் பாதை, மனித இதயத்தை நோக்கிச் செல்லும் பாதை!

எந்தக் கலை மக்களுக்கு மிகவும் விருப்பமானதோ, எந்தக்கலை மக்களின் ஊனோடும் உயிரோடும் கலந்து உறவாடுகின்றதோ, அந்தக் கலையே பல்லாண்டு பல்லாண்டாகப் பாதுகாக்கப்படும்.

—செர்கி கோனன்கோவ் (சிற்பி)

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.